# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

துணர் உ௭ | திருவள்ளுவர் யாண்டு ௧௯௮௨ கர—வைகாசி 1951—மே | மலர் ௨

## பொழிற்றொண்டர் கருத்துரைகள்

சென்னைத் தமிழ்வளர்ச்சிக் கழகத்தின் சார்பில், நான்காவது தமிழ்த் திருவிழா, 1951, ஏப்பிரல், 29, 30, மே, முதல் நாட்களில், யாழ்ப்பாணம் பரமேசுவரர் கல்லூரியில், வழக்கம்போலச் சிறப்பாக நடந்தது. வரவேற்புக் கழகத் தலைவர் திரு. சு. நடேச பிள்ளை யவர்களும், திருவிழாத் திறப்பாளர் திரு. அவிநாசிலிங்கஞ் செட்டியார் அவர்களும், கலைக் கண்காட்சித் திறப்பாளர் வீரத்திரு. சு. வைத்தியநாதன் அவர்களும், திருவிழாப் பொதுத்தலைவர் திரு. சி. ஆர். சீனிவாசன் அவர்களும், இலக்கியம், விஞ்ஞானம், வரலாறு ஆகியவற்றின் பகுதித் தலைவர்களாகிய பேராசிரியர் திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை, பேரறிஞர் வீரத்திரு. கே. எஸ், கிருட்டினன், சு. நடேசபிள்ளை அவர்களும், ஏனைய சொற்பொழிவு முதலிய துறைகளில் பங்கு எடுத்துக்கொண்ட அறிஞர்களும் தமிழ் மொழியின் சிறப்பையும் அதனை வளர்க்கவேண்டிய இன்றியமையாமையையும் விரிவாக எடுத்துக் கூறி, கொண்ட பணி நிறைவேறுவதற்கான திட்டங்களையும் செய்தார்கள். திருவிழாவிற்குச் சென்றிருந்த பெருமக்களுக்கு வேண்டும் வசதிகள் ஏதொரு குறையுமின்றிச் செய்துகொடுக்கப்பட்டன.

இந்தியா இலங்கை இரு நாடுகளிலும் உள்ள தமிழ் மக்கள் தம் அருமைத் தமிழ்மொழியின் மேம்பாட்டில் கருத்துக்கொண்டு கொண்டாடிய இத் திருவிழாவின் சிறப்பு நிகழ்ச்சி, நம் அருமைத் தமிழ்மொழி நாளும் நாளும் ஓங்கி வளர்தற்கு அறிகுறியாயிருந்தது,

# மதிப்புரை

மூத்த பிள்ளையார் புகழ் மாலை — இராமன் பதிப்பகம், புதுக்கோட்டை— பக்கம் 36.

இவ் வழகிய சிறு நூல் இப் பதிப்பகத்தாரின் முதல் தொண்டாக, எல்லா இடர்களையும் களையவே பிறந்தருளிய மூத்த பிள்ளையாரின் புகழ்ப்பாக்களுடன் பொலிவதும், தமிழ்ப் புத்தாண்டுப் பிறப்பாம் நன்னாளில் வெளி வந்திருப்பதும் இப் பதிப்பகத்தின் எதிர்கால முன்னேற்றங்களுக்கு அறி குறிகளாகும். பல பாராயணத்திற்கான அருட் பாடல்கள் இங் நூலகத்துத் திகழ்வதால் யாவர் கையகத்தும் பையகத்தும் இருந்து பெரும் பயனளிக்கவல்லது இது என்பதற்கு ஐய மில்லை. இப் பதிப்பகத்தாரின் கடவுளன்பிற் கலந்து கொண்ட சில தற்காலப் புலவர்கள் பொய்யாத விநாயகர்பால் தங்கள் நாட்டத்தைச் செலுத்திப் பராட்டியிருப்பது போற்றத் தகுந்த தாகும்.

விநாயகர் அகவலும், விநாயக புராணத்தி லுள்ள சரண்புகு பாடல்களும், கவசமும் (விநாயக புராண மல்ல) வேழமுகமும், 'பொய்யாத விநாயகர் புகழ்மாலை' க்கு முன் (அதாவது 12ஆவது பக்கத்தின் பின்) வைக்கப்பெற்றிருப்பின் வரிசைப்பாடு சரியாக இருந்திருக்கும். 'சிந்தனை நின் தனக் காக்கி நாயினேன் தன் கண்ணிணை நின் திருப்பாதப் போதுக் காக்கி, வந்தனையும் அம்மலர்க் கேயாக்கி........' பாடிய பாடல் களுக் கிடையே சமயத்திற் கேற்பப் பாடிய பாடல்களைப் பெய்வது 'நேரின மணியை நிரல்பட' வைத்ததாகாது. ஒவ்வொரு பாடலுக்கும் சிறு முன்னுரையும் குறிப்புகளும் இந் நூலைப் பெருமைபடுத்துவது திண்ணம். எனினும் இந் நல்ல நூலை வெளியிட்டுள்ள கருத்தையும் பயன்பாட்டையும் நோக்கி இப்பதிப்பகத்தாரை வாழ்த்துகின்றோம்.

• • • • •

# பிளாட்டோ

(வேலூர்க்காரழகன்)

" ஞானி நாடாளவேண்டும்; அல்லது நாடாள்பவன் ஞானியாகவேண்டும் "

உலகில் பிறப்போ ரனைவரு மிறப்ப துறுதி என்ருலும் இறவாப் பெரும் புக ழெய்தியவர்கள் மிகச் சிலரே; இறை யருள் பெற்ற துறவிகளும், கவிக ளியற்றிய கவிஞர்களும், அறத்தை அருளிய அறவோர்களும் அவனியில் அழியா வாழ் வெய்திக் கழியாப் புகழ் பெற்றனர். வரலாற்றுக்காலந்தொட்டு அரசியல் அவல மலிந்ததென்று, பெரியார்களும், நீதிவான்களும், அறிஞர்களும் அரசியலில் தலை காட்டாமல் ஓடி ஒளிந்த வழக்கம் இன்றும் மறையவில்லை என்ருலும் அன்றே அரசியலில் நுழைந்து அவலத்திற் கிரையாகித்துன்பத்தில் தோய்ந்து பண்பும் அறிவும் கலந்த நல்லதோர் அரசியலை அவனிக் களித் தழியாப் புக ழெய்திய பெருஞ் சிறப்பு பிளாட்டோ ஒருவருக்கே உண்டு.

மேல்நாடு மேன்மை எய்தியமைக்கு கிரேக்க நாடே தலையாய காரணம். கலை யியலுக்கும், அறிவியலுக்கும், நாகரீக இயலுக் கும், அரசியலுக்கும், இலக்கிய இயலுக்கும் உறைவிடம் கிரேக்க நாடே. இந் நாடு கலை யியலால் ஓங்கி, மக்களாட்சியால் மாண் பெய்தி, பேரரசால் பீடெய்தி, பாரில் பேரொளியுடன் பிறங் கிற்று. என்ருலும் மூண்ட பெரும் போரால் பேரரசு பிடி சாம்பலாயிற்று; மக்களாட்சியும் மாய்ந் தொழிந்தது. கிரீக் நாடு குலைந்தாலும், அந் நாட்டு அரசியல் அழிந்தாலும், சாக்ர டீசையும் பிளாட்டோவையும், அரிஸ்டாட்டலையும் ஈன்று அந் நாடு இறவாப் பெரும் புகழை எய்தியுள்ளது,

கிரீக் நாட்டரசியலை உருவாக்கி மக்களாட்சியைச் செம்மை யாக்கி, அரசியலை ஒழுங்காக்கி. பேரரசைப் பீடுற வைத்து சிறந்த அரசியல் தந்திரி என பெர்கிலஸ் என்ற பேரறிஞர் விளங்கினர்; இவர் கி.மு. 428இல் மறைந்த பொழுது இவருடன் அரசியலும். ஆட்சியியலும், மக்களாட்சியியலும் மறைந்தன

வென்று ஏதன்ஸ் மக்கள் ஏத மடைந்தனர். ஏத மடைந்த ஏதன்ஸ் மக்களை ஏம முற வைக்க அதே ஆண்டில் வையக அரசியல் பிழம்பாகக் கிரேக்க நாட்டில் பிளாட்டோ தோன்றி அரசியல் ஒலியை ஒளிர வைத்தார்.

அரச மரபுக்கும் ஆண்டவன் மரபுக்கும் தொடர்புடைய உயர்பெருங் குலத்தில் பிளாட்டோ அரும்பிச் செல்வ வளமை யில் தோய்ந்து அறிவுடனும் அழகுடனும் திகழ்ந்தார், இவர்தம் அறிவு நாடக இயலிலும், கவி இயலிலும் நிரம்பப் படிந்த தெனினும் இவ்விரண்டையும் விட் டொழித்து நற்பொருளில் (தத்துவத்தில்) இவர் தம் அறிவைச் சிவண வைத்தார். அறி வியலும் ஒழுக்க இயலும் ஒன்ருகப் பிணைந்த ஹொாக்ளடின் நற் பொருளில் (தத்துவத்தில்) பெரிதும் தோய்ந்தார். பதினெட்டு வயதிற்குப் பின்னர் இவர் வாழ்வு போரில் படிந்திருக்க வேண்டு மென்றதால் இவர் கல்விப் படிப்பைப் பற்றி அறிய இயல இல்லை. என்ருலும் சிந்தனையின் ஒளியாக விளங்கி, மெய்யான கடவுளை நம்பி, அற இயலில் வாழ்ந்து, அறிவியலை ஏந்திய கலைஞர் சாக்ரடீசின் மாணவராகத் திகழ்ந்தமையால் இவரின் அறிவு, அகன்று, ஓங்கி, பெருகி, அறிவியல் பிழமபாகத் துலங்கியது. சாக்ரடீஸ் பெரிதும் விரும்பிய பண்பும் அறிவும் பிணைந்த பொற்புடைய திருந்திய நல்லரசியலை நிறுவப் பெரிதும் விழைந்தார். நல்லரசியலை நிறுவி நலம் பல புரிய விரும்பிய விருப்பம் கை கூடிற்று. நாடு போரில் படு தோல்வி எய்தியமை யால் நலிவும், தளர்வும், தீங்கும், குழப்பமும் பெருக் கெடுத் தோடின. யாண்டும் நீதியும், நன்மையும், அமைதியும் பரவ அமைக்கப் பெற்ற நாடாளும் குழுவில் இவரும் (பிளாட்டோ வும்) இருக்க இல்லங் தேடி அழைப்பு வந்தது. பழம் நழுவிப் பாலில் விழுந்ததெனக் கிட்டிய வாய்ப்பைக்கண்டு கழிபேருவகை யடைந்தார்; தீங்குகளைத் தகைக்கலா மென்று மகிழ்ந்தார். ஆனல் இவர்தம் அவா அவலமடைந்தது; ஏனெனில் உண்மையே உருவான வியோனைக் கைது செய்து கொல்லுதற்குச் சிறந்த சாக்ரடீசை அரசாங்கம் துணை கொண்ட தீமையைப் பிளாட்டோ பெரிதும் சிந்தித்துச் சிந்தித்து அலக்கணுற்ருர். ஏனெனின் அரச மன்றத்தில் இவர் இருந்தும் இத் தகைய தீங்கு நிகழ்ந்ததே என்று எண்ணி எண்ணி வருந்தினர். இந் நிகழ்ச்சி யொன்றே அரசியலைப் பெரிதும் வெறுக்க வைத்தது.

சிந்தனையின் பிழம்பாகப் பிறங்கி அறிவியலை அறைந்து கலை யியலைக் கூறி இயற்கை இயலை இயம்பித் தூய தெய்வீகத் தைத் தெளிவுடன் விளக்கி அனைவர் உள்ளத்திலும் ஆராய்ச்சி வித்திட்டு உலகை உயர்வுற வைக்கப் பாடுபட்ட சாக்ரடீசு

குற்றம் நிறைந்த பிழை மலிந்த குடியாட்சிக்கு வணங்காமையால் நஞ்சு நல்கப் பெற்று கல்லறை எய்தியதைக் கண்ட பிளாட்டோ வின் நெஞ்சம் நீராய் உருகி ஓடிற்று. துன்பக் கடலில் மூழ்கி வெம்மைக் கடலில் உறைந்தவன் நிலையில் பிளாட்டோ இலங்கி னுர். அறவோரிருவருக் குற்ற நிகழ்ச்சிகளால் மிகவும் எச் சரிக்கையுடனிருக்கத் துணிந்து பெரிதும் பெரும் சிந்தனையில் மூழ்கி மூழ்கி வாடி வதங்கி அல்லலுற்ருர். சாக்ரடீசுக்கு வையகம் தந்த வம்புகளை எண்ணி எண்ணி உலகைப் பெரிதும் வெறுத்து அரசியலை அறவே மறந்து பாரில் புகலிடமின்றித் தள்ளாடித் திணறினுர். பிறந்த நாட்டைப் பெரிதும் மறந்து அயல் நாடுகள் சென்று பன்னிரண்டு ஆண்டுகள் காலங்கழித் தார்.

சிசிலிக்குச் சென்று திரும்பிய பொழுது பல்கலைக் கழகம் நிறுவ எண்ணினுர்; மக்களாட்சியால் (ஜனநாயகத்தால்) நீதிக் கும் அறத்திற்கும் ஊறு நிகழ்ந்ததை எண்ணி அறிவும் பண்பும் நீதியும் நேர்மையும் உண்மையும் மக்களிடத்து நிலைத்திருக்க வேண்டுமென எண்ணினுர். இவ்வுயரிய பண்புகள் மக்களிடை பரப்புவதற்குரிய பெருந் தொண்டாற்றுவதே தலையாயபணி என்றெண்ணினுர். இக் கருத்தை முன்னிறுத்திப் பல்கலைக்கழகம் நிறுவி அதில் நாற்பது ஆண்டுகள் பேராசிரியராகவே இருந்து கலைப்பணி ஆற்றிவந்தார்; அவருக்குப் பின்னர் அப்பல்கலைக் கழகம் ஒன்பது நூறு ஆண்டுகள் தொடர்ந்து நடந்தது; இது போன்ற கலை மன்றம் மேல் புலத்தில் எக்காலத்திலும் தோன் றியதே இல்லை; குறிப்பாக அரசியலறிஞர்களைத் தோற்றுவிக் கவே மேற்படி கழகத்தை நிறுவினுர்; பிளாட்டோ வரைந்த கடிதத்தில் அவரைப்போன்ற பெரியார்களுக்கு அரசியலில் தலை யிடும் வாய்ப்பு அருகிவிட்ட தென்ருலும் நாட்டை நலமுற வைக்க வேண்டுமென்ற நம்பிக்கை நலியவில்லை என்று கூறியுள் ளார். பல்கலைக் கழகத்தில் பயிற்சி பெற்றவர்கள் பிளாட்டோ வின் கருத்துப்படி அரசியலை அறிந்து நடை முறைக்குக் கொணர்ந்தால் கிரேக்க மக்கள்மீண்டும் அவரையேதலைவராகக் கொள்ளுவார்களென்ற நம்பிக்கை இருந்தது. ஓரளவுக்கிதில் வெற்றி கண்டார், இவரிடம் பழகிய அறிஞர்கள் அரசியலை யமைக்க இவரையும் பல்கலைக் கழகத்தையும் நாடிப் பலனெய் தினர். கி. மு. 400இல் அறிவியல் கணிதஇயல், வானஇயல் இன்ன பிறகலைப் பொருள்களாராய்ச்சிகள் நிகழ்ந்தகாலத்தில் பல்கலைக்கழகம் மேற்படி ஆராய்ச்சிகளுக் கரண்செய்தது.

சிறந்த அறிவும் உயரிய புலமையும் பெரு நோக்கமும் நிரம்பிய பிளாட்டோ சமுதாயத்தைச் சீர்திருத்தப் பெரிதும்

விழைந்தார். சமுதாயவளர்ச்சிதான் அரசியல் வளர்ச்சிக்கு அரண்செய்யு மென்ருர்.

இலக்கியப் புலமையும் நாடகப் புலமையும் எடுத்துரைக்கும் இனிய புலமையும் இவர் நிரம்பப் பெற்றிருந்ததை எண்ணுங் கால் இவர் பெற்ற மொழிப் புலமையின் உச்சநிலை விளங்கு கிறது. உரையாடல் முறையில் இவர் தம் கனிந்த அறிவியற் கருத்துகள் உலகில் உலவுகின்றன. உயரிய நீதியை முன்னி றுத்திப் பண்பாட்டைத் துணைகொண்டு அறிவியலை இறுதியாக்கி அரசியற் பணி ஆற்றவேண்டுமென்றும் சிறந்த அமைப்பை அமைக்க வேண்டுமென்றும் சமுதாயத்திற்குரிய அரசாங் கத்தை நடாத்த வேண்டு மென்றும் கூறினர். நாட்டையும் மக்களையும் பழைய நிலையை விட உயர் நிலைக்கு உயர்த்துபவனே உண்மையான நாட்டுத் தலைவன் என்ருர். இவ் வுயரிய பணி யாற்றுதற்குப் பகுத்தறிவு முறையில் நற் பொருள்களை (தத்து வங்களை) ஆராய வேண்டு மென்ருர்; நீதி நெறியுடன் பிறருக் குதவி செய்தலே சால்புடைத் தென்ருர்.

வானுலகைப் போன்று மண்ணுலகில் குற்றமற்ற நல்ல நாட்டைத் தோற்றுவிக்க வேண்டு மென இவர் விழைந்ததை எண்ணுங்கால் சிறந்த சட்டங்க ளியற்றி அரிய நாட்டைத் தோற்றுவிக்க வேண்டு மென்பதை விளக்குகிற தல்லவா? இவ் வுயரிய நாட்டை நிறுவுதற் குரிய பொறுப்பையும் பெருமை யையும் பகராமலில்லை. ஓர் உயரிய ஓவியப்புலவன் ஒரு படத்தைக் கண்டு வரைய முயலுகையில் முதற் படத்தைப் போன்று வரைய முடியாமற் போயினும் இயன்ற அளவு வரைய முயலுவா னென்றும், அவ்வாறு வரையும் ஓவியப் புலவன் தனி அறிவும், பொருளறிவும், கலை அறிவும் ஒருங்கே பெற்ரு லன்றி வரைதலரி தென்றும், அஃதே போன்று நாட்டுத் தலை வனே, சீர்திருத்தவாதியோ தன் கொள்கையைக் கற்பனையில் மிகத் தெளிவாக உணர்ந்து அதை நடைமுறைக்குக் கொணர் கையில் நல்லறிவும் சிறந்த அனுபவமும் நிரம்பப் பெற்றிருத்தல் வேண்டு மென்று வற்புறுத்துகிருர். இவ் வுயரிய முறையை மனித சமுதாயத்திற் குவந் தளித்தவர் பிளாட்டோ அன்றி வேறெவர்?

சமூகம் சிறந்து விளங்க அறிவும், பண்பும், நீதியும் உருவான நாட்டுத் தலைவர்கள் வேண்டு மென எண்ணியதற்கு உலக இலக்கியத் தொன்மைக் கவி ஹோமர் கூறிய 'தெய்வீக மக்கள், கடவுள் போன்றவர்கள்.' என்ற உயர்ந்த வார்த்தை

களைக் கொண்டு நாட்டுத் தலைவர்களின் இலக்கணத்தை யாத்தார் போலும்.

தனி மனிதனுடைய தேவைகளைத் தனி மனிதனால் பெற இயலா தென்றும் சமூகத்தின் உழைப்பு தனி மனிதனுடைய தேவையை அளிக்கு மென்றும் கூறி, தனி மனிதனுக்கும் சமுதாயத்திற்கு முள்ள தொடர்பை விளக்கினார். தொழில் முறையைச் சமுதாய நன்மைக்கு ஏற்றவாறு பிரித்து ஒவ்வொருவருக்குரிய தேவையை அளித்துவப்பிக்க வேண்டு மென்றார். இவ்வுயரிய கருத்தை மக்கள் அறிந்து உயர் நிலை எய்துதற் குரிய சிறந்த கல்வியை மக்களுக் களிக்க வேண்டு மென்றார். விரைவிலறியவும், அறிந்ததை மனதில் படிய வைக்கவும், உறுதியும், தன்னடக்கமும் இன்ன பிற பெறுதற்கு கல்வி தான் இன்றியமையாத தென்றார். நாட்டுத் தலைவர்கள் நீதியுடன் விளங்கினால் போதா தென்று பகுத் தறிவுக் கண்கொண்டு நன்கு அறிய வேண்டு மென்றார்.

தனி மனிதன் தனிச் சொத்துப் பெறுமல் சமூகத்தில் ஒருவனாகவிளங்கி சமூக நலத்திற்குப் பாடுபடவேண்டுமென்றும் வாழ்வுக் கின்றியமையாத பொருள்களை அரசாங்கத்தினிடம் பங்கீடு முறையில் பெற்று சமூகம் முன்னுக்கு வரப் பாடுபட வேண்டு மென்றும் கூறி தனிவாழ்வைத் தகைத்துச் சமுதாய வாழ்வைச் சிறப்பிக்கக் குழந்தைகளை அரசாங்க மருத்துவ மன்றத்தில் வளர்க்க வேண்டு மென்றார்.

சமூதாயத்திற்காகத் தனி மனிதன் வாழவேண்டு மென்றும் தனி மனிதனுக்காக சமுதாயம் வாழக்கூடாதென்றும் கூறினர். பொருள் தான் சமூதாயத்தின் குறிக்கோளா யில்லாது நல்வாழ்வுதான் குறிக்கோளா யிருக்க வேண்டு மென்றும் அந்நல்வாழ்வுக்குப் பொருள் தேவை என்றார். மனித முயற்சி எல்லாம் பொருளுக்காக இருக்குமாயின் பொருள் பெற்ற சிலருக்கும் பொருளற்ற பலருக்கும் போர் நிகழுமென்றார். தன்னலம் தகைந்து பொது நலம் வளர்வதே நாட்டின் குறிக்கோளாயிருக்க வேண்டுமென மொழிந்தார்.

மக்கள் நலமுற வேண்டின் உண்மை நற்பொருளும் (தத்துவமும்) அரசியலதிகாரமும் ஒன்றாகி ஞானி நாடாள வேண்டும அல்லது நாடாள்பவன் ஞானியாகவேண்டு மென்றார். இவை எளிதென்று பன்னிப் பன்னிப் பகர்வார்; பொல்லாங்கும் தீங்கும் நிரம்பியதே இவ்வையக மென்றார்; விலங்குகளிடைச்

சிக்குண்டவன் நிலை தான் நல்லோனுக் கிவ்வுலக மென்றார். நற்பணியாற்றி நலம் பல புரிய நல்லிடத்திற்குப் பெரிதும் நாடினார். மாசுடைச் சுழற்காற்றுச் சூழலில் சிக்குறாது அமைதி யிடத்திற் றஞ்சம் புகுந்து, அறங் கடந்தமையால் தீங்கெய்து பவரின் தீயதன்மையைப் பார்த்து, இவ்வாழ்க்கையில் தூய்மை எய்தி மறுமையில் மாண்புடனிருக்க அறவோன் ஆவன புரிவ னென்றார்.

தனி ஒருவனின் நற்பண்பும், நல்லறிவும், சமூகத்தை உயர் நிலைக்குக் கொணருமென்றும், இல்லையெனின் முடிவில்லா மக்களாட்சியும் சர்வாதிகாரமும் குறுகிய குடிஆட்சியும் சகடக் கால் போல் மாறி மாறி வருமென்றார். நாடாள்பவனும் பேராசை நிறுவுவோனும் நம்புதல் வேண்டு மென்றும் பிறர் நம்ப நல்லவனாய் விளங்கல் வேண்டுமென்றும் கூறினார்.

மேல் நாட்டில் முதன் முதலில் பல்கலைக் கழகம் நிறுவிய சிறப்பு பிளாட்டோ ஒருவருக்கே உண்டு; உண்மை யறிவை நல்கவே தோற்றுவித்தார். நற்பொருள், கணக்கு, வானநூல், ஆட்சியியல், அரசியல், சட்ட இயல், கலையியல் இன்ன பிற வற்றைப் பெரிதும் விளக்கப் பெருங் கருவூலமாகத் திகழ்ந்தது. இதில் பயின்ற மாணவர்கள் சட்ட மியற்றுவோராகவும் ஆலோசனை யாளராகவும் விளங்கினதோ டல்லாது அரசர் களுக்கும் மக்களாட்சியினர்களுக்கும் வழிகாட்டிகளாக விளங் கினார்கள். வையகம் வம்புடையதென்று வெறுத்தவர்களுக்கு இப் பல்கலைக் கழகமே புகலிட மென்று விளங்கிற்று; ஆழ்ந் தாராயவும் கூர்ந்து சிந்திக்கவும் இக் கழகம் அரண்செய்தது; அறிவின் ஒளிப்பிழம்பாய் ஒளிர்ந்தது இக்கழகம். பலபொருளைத் துருவித் துருவி, நுணுகி நுணுகி ஆராய்ந்து தெளிவெய்தி, துளக்க மற விளக்கும் பெற்றியராய்த் திகழ்ந்தமையால் தெளி வறிவுடைமையின் தந்தை (Father of Idea) எனத்துலங்கினார்.

வாழ்க்கையில் தோல்வியுறுதற்குரிய காரணத்தை உய்த் துணர்ந்து வெற்றியுறுதற் குரிய துறையைத் துருவித் துருவி

(55 ஆம் பக்கம் பார்க்க.)

# ஆங்காங்கே (6)

திரு. கோ. தியாகராசன், G. M. V. C., தஞ்சை

## பழந் தமிழ்ச் சொற்களுக்குப் புதுப்பொருள்

I. ‘கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை’

—திருமுருகாற்றுப்படை, வரி 7.

ஞாலத்தின் வெப்பப் பகுதியி லுள்ள கடல்களில் ஒரு நிகழ்ச்சி ஏற்படுகிறது. அதாவது:—

வங்காளக் குடாக் கடலில் நான் சென்று கொண்டிருந்த பொழுது, வானத்திலிருந்து ஒரு பெரிய துதிக்கை போன்ற கரு உருவம் கடலை நோக்கி இறங்கியது. அதுபொழுது கடல் நீர் மேலே கிளம்பியது. இத் துதிக்கையும் நீரும் ஒன்றுகலந்து மிகப் பெரிய தூண் போல அரைக்கால் நாழிகை காணப்பட்டது. பிறகு இக் கரு உருவம் மேலே செல்ல, கடல் நீரும் உள் அடங்கியது. கால் நாழிகைக்குப் பின் ஒரு இருண்ட மேகம் நான் போய்க் கொண்டிருந்த கப்பலின் மேலே சென்றது, அப்பொழுது பெரும் மழைத் துளிகளை அம் மேகம் பொழிந்தது. அவ் வமயம் காற்று கிடையாது; கடல் அமைதியாகவே யிருந்தது. இந்தக் காட்சியைக் கண்ட நான், அங்குள்ள துணை மாலுமியை, இந்த உருவம் யாதென்று கேட்டேன். அதற்கு, அவர், இது கடலிலிருந்து மழை கொண்டு போகும் ஒரு இயற்கை முறை என்று சொன்னார். நான், இவர் தந்த விடையைக், கப்பலோட்டிகளின் கயிறுதிரிப்பு எனக் கொண்டேன். (Sailor's yarn). பல ஆண்டுகளுக்குப் பின், ‘Marvels of the Universe’ என்னும் ஆங்கில நூலைப் படித்தபொழுது, அந்தத் துணைமாலுமி சொன்னது மெய் யென்று தெளிந்தேன். அந் நூலில் உள்ளது இக் கட்டுரையின் ஈற்றில் சேர்க்கப்பட்டிருக்கிறது. (44)

கடல் கடந்த நம் முன்னோர்கள் இந்த நிகழ்ச்சியைக் கண்டிருப்பார்கள் என்பது திண்ணம். (இவ் வங்காளக் குடாக் கடலை பத்து முறை கடந்த நான் இக் காட்சியை இரு முறை கண்டேன்.)

இந்த நிகழ்ச்சியையே நான் மேலே எடுத்துக் காட்டிய வரியில் உள்ள 'கார் கோள்' என்னும் இணைப்பெயர் குறிப்பது என்பது எனது துணிபு. கார் கோள்—மழை கொள்ளி. பின் வரும் வரிகளில் இக் கருத்தைப் பொதித்து உரை கூறின் அவ் வுரை பொருத்தமாகவும் சிறந்ததாகவும் இருக்கும்.

'கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை
வாள்போழ் விசும்பின் வள்உறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண்ணறுங் கானத்து'

மேலும், மேற் காட்டிய வரிகளில் விளக்கப்படும் நிகழ்ச்சி பாண்டி நாட்டி லுள்ள திருப்பரங்குன்றத்துக் கானத்தைச் சிறப்பிக்கு மிடத்துக் கூறியிருப்பது என் கருத்துக்கு அறன் செய்வதாகின்றது. மற்றும், அகநானூற்றின் 134-ஆம் பாட்டில் 'கமஞ் சூன் மாமழை' என வந்திருக்கிறது. இதற்குப் பொருள்: நிறைந்த சூலினையுடைய பெரிய மேகங்கள். எனவே, 'கார் கோள் முகந்த கமஞ் சூல் மாமழை' என்பதற்கு, கார்கோள் (Water spout) முகந்ததால் நிறைந்த சூலையுடைய கரிய மேகங்கள் என்னும் பொருள் சிறந்தது.

தொல்காப்பியர் காலத்தில் வழங்கிய சொற்களில் சில பிற்காலத்தில் மறைந்தன என்பது நாம் அறிந்ததே. இதுபோலவே, கடலோடிய நம் பண்டை மக்கள் முன் கொண்ட கருத்து பிற்காலத்தில் மறைந்தது போலும்.

எவ்வாறாயினும், நம் நாட்டின் எல்லைக் கடலில் நிகழும் நிகழ்ச்சிக்கு ஒரு பெயர் வேண்டியதே. ஆகையால், 'கார் கோள்' என்பதற்கு 'Water spout' என்னும் சொல்லி லுள்ள பொருள் ஏற்பது தகுதி.

II. 'மஞ்சாடு மலை மங்கை மணாளனை—நெஞ்சே நீ
நினையாய்'

இவ்வரியி லுள்ள 'மஞ்சு' என்னும் சொல்லிற்கு 'மேகம்' என்னும் பொருள் கொண்டுள்ளார். இப் பொருளுக்கு வேறாக (Snow) ச்நோ என்னும் பொருள் ஏற்பது தகுதி.

தமிழ் நாட்டில் (Snow) ச்நோ இல்லை. இது இமய மலையில் தான் உள்ளது. எனினும், இமய மலை வரை படை யெடுத்துச் சென்ற நம் பண்டை மக்கள் இப் பொருளை அங்கு கண்டிருக்க வேண்டும்.

இந்த ச்நோ (Snow) என்னும் பொருள் பஞ்சு போல் வெண்மையும், மென்மையும், உடையதாய் வானத்திலிருந்து விழும்பொழுது ஆடிக் கொண்டு கீழே விழும்; இலேசான தன்மை யுடையது.

தமிழ்ச் சொற்களின் அமைப்பில் ஒரு செழுமை முறையை நம் பண்டை மக்கள் தழுவி யிருக்கின்றனர்.

பின் வருவன இம் முறையை எடுத்துக் காட்டுவன,

(1) 'கருத்து', 'குருந்து' என்னும் சொற்களில் முதல் எழுத்து வேற்றுமைப்பட்டும், மற்ற எழுத்துக்கள் ஒற்றுமைப் பட்டும் வருகின்றன. முதல் எழுத்தின் வேற்றுமைக் கேற்க, பொருள் வேற்றுமை யுள்ளது விளக்கம். மற்ற எழுத்துக் களின் ஒற்றுமைக் கேற்க உட் கருத்து ஒற்றுமையுள்ளது. அது, இவை யிரண்டும் உள்ளிருந்து கிளம்புவன என்பதாகும்.

(2) 'வெருள்', 'மருள்'. இவ் விரண்டு சொற்களிலும் உள்ள ஒற்றுமைக் கருத்து 'திகைப்பு' என்பது.

வெருள்—Consternation due to physical phenomenon.

மருள்—Consternation due to mental phenomenon.

(3) 'வழக்கம்', 'பழக்கம்'. இவ் விரண்டு சொற்களில் உள்ள ஒற்றுமை உட் கருத்து 'கால நீட்சி'

நீண்ட காலம் வழங்குவதே—வழக்கம்.

நீண்ட காலம் பழகுவதே—பழக்கம்.

மேலே காட்டியன போலவே 'பஞ்சு', 'மஞ்சு' என்னும் சொற் களில் ஒற்றுமைப்பட்ட உட் கருத்து 'வெண்மை', மென்மை', இலேசு என்னும் தன்மைகள். 'கார் கோள்'—'மஞ்சு' என்னும் சொற்களுக்கு மேலே காட்டிய பொருள்கள் ஏற்காதாயினும், 'Water Spout', 'Snow' என்னும் பொருள்களுக்கு ஏற்ற தமிழ்ப்பெயர்கள் இல்லாமையினால், பழஞ்சொற்களின் பொருள் களைச் சிறிது திரித்து புதுப் பொருள்கள் அமைப்பது, (Give a turn to the meaning of an old word to coin a new word) என்னும் முறைப்படி, இச் சொற்களுக்கு நான் குறித்த பொருள் களை ஏற்பது தகுதியாகும்.

எனவே, 'கார் கோள்'—Water Spout.
'மஞ்சு'—Snow,

(42) மேற்கோள் : Marvels of the universe, Vol I, P. 45.

*Water Spouts* :—Within the debatable area of the tropical seas, within the limits of the north-east and south-east trade winds is the most favoured place to witness this stupendous alchemy of nature. The wind has died in to fitful airs from all parts of the compass, the sky is over cast with massive clouds and the atmosphere is tense with electrical energy. Suddenly there will appear in the sea, without any apparent proximate cause, a tiny whirpool, if one may so call a rapid circular movement of the sea, whose centre rises instead of being depressed.

On looking upward, immediately above this movement of the waters, will be seen a corresponding excitement in a cloud, from which will presently descend a dark tube, much like the trunk of a mighty elephant, swaying about as it lengthens, until at last it joins the mound of water beneath and establishes a connection between the sea and sky. Now, in obedience to who knows what contrifugal impulse, the water of the sea rushes upwards with a roar which may be heard five hundred yards away. The cloud above grows black, menacing and monstrous. In a few minutes some mysterious operator has signalled that one hundred thousand tons or so of water received above is sufficient for the cloud to bear, and immediately the connecting tube begins to dwindle, until it soon ceases to exist and its attenuated length is abosrbed into the black bosom above.

Away sails the vast reservoir to thirsty lands far off, often letting fall at the breaking of the connection between cloud and sea a mass of water which is perfectly fresh.

## வாழ்த்து.

'நோய் நொடி யில்லாமல் வாழ்க' என்பது பண்டை வாழ்த்துக்களில் ஒன்று.

'நோ' என்னும் சொல்லிலிருந்து வருவது 'நோய்'

நோயில்லாம விருப்பதே பெரும் வாழ்வெனக் கருதியே 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என நம்மிடை ஒரு பழமொழி வழங்குகிறது. ஆகையால், 'நோய்க் கிடங்கொடேல்' என்றார் ஔவையார். இம்மொழி நோய் வராமல் தடுப்பதையும், உற்ற நோயைத் தீர்த்து காப்பதையும் குறிக்கும் (by preventive and curative measures)

எனவே,

'உற்றநோய் நீக்கி உறுமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்'

என்றார் திருவள்ளுவர்

'நொடி' என்னும் சொல், 'நொள்' என்னும் சொல் லிலிருந்து வருவது. நொள்ளைக் கண்ணன்—பார்வை யிழந்து குழிந்த கண்ணையுடையவன். எனவே, வண்டிகள் போகும் வழியி லுள்ள குழிகளுக்கு 'நொடி' என்று பெயர் வந்தது. நொடிப் பவன் நொண்டி. ஆகையால், வழியில் செல்லும் வண்டியின் உருளைகள் குழிகளில் விழுந்து நொண்டி நடப்பது போல் ஒரு புறம் சாய்ந்து, சாய்ந்து செல்லுவதால், 'வண்டி நொடிக்கிறது' என்கிறோம். இதுபோல், ஒருவனின் பொருள் நிலை குலைந்தால் (குழிந்தால்) (Financial Depression) அவன் நொடித்ததாகக் கூறுகிறோம். மேலும், பெரிய நொடியில் விழுந்த வண்டியின் அச்சு முறிவ துண்டு. எனவே, பொருள் நிலை முற்றும் கெட்ட வன் நிலையை 'அச்சு முறிந்தது' என்கிறோம் (Financial break down). இவ்வாறாக, 'நொடி' என்னும் சொல் உடல் உறுப்பின் சீர்க் கேடால் வருவதையும், பொருட் கேடால் வரும் நிலையை யும் குறிக்கும்.

முதலில் எடுத்துக் கொண்ட 'நோய் நொடி' என்னும் சொற்றொடரில் 'நொடி' என்பது பொருளின் சிதைவைக் குறிக்கும.

இவ்வாறாக, 'நோய் நொடி இல்லாமல் வாழ வேண்டும்' என்பது உடல் நலிவும், பொருள் நலிவும் இல்லாமல் வாழ

# இசைத் தமிழ்

கும்பகோணம், சங்கீதம் திரு. ப. சுந்தரேசன்,
இசையாசிரியர், அரசர் கல்லூரி, திருவையாறு.

(முற்றொடர்ச்சி: துணர் உ௰௭, மலர் க, பக்கம் 32)

## இசைகளின் பிறப்பு முறை.

மிகப் பழமையான காலத்திற்றானே பாணர் பெருமக்கள் தங்களது யாழ்க் கருவிகளில் நின்ற நரம்பிற்கு ஐந்தாம் நரம்பு ஐந்தாம் நரம்பாகத் தெறித்து அறிந்து ஒவ்வொன்றும் தனித் தனிப் பகுதியாக (பாலையாக)த் திகழ்வதை அறிந்துவிட்டனர், அம்முறையே கிளையிற் பிறப்பு முறையெனக் கூறப்பட்டது. அதனை நாம் இதுகாறும் காட்டி வந்த கணித முறையும் பழைய இசைத் தமிழ் நூலினுள் அமர்ந்து கிடந்த கீழ்க்காணும் இந்நூற்பாவும் தெளிவுபடுத்தி நிற்கின்றது.

---

வேண்டும் என்பதாகும். (Live with health and wealth.) இத்தகைய செம் பொருள் பொதிந்த வாழ்த்து மொழி தமிழில் இருக்க, 'பிற மொழி பெரு மொழி' எனப் போற்றும் ஒரு பேதை ஒரு கூட்டத்தின் முடிவில் 'சுபீச்சமா இருக்க வேண்டும்' என்றான்.

'சுபீச்சம்' என்னும் சொல்லிற்குப் பொருள் தெரியாத நான், இதென்ன, இவன் 'நன்றாக பீச்சச் சொல்லுகிறான்' என்று நினைத்தேன். ஒருக்கால், இக் கூட்டத்தில் உள்ளவர்களில் பலர் பகலில் பெரு விருந்து அருந்தினர் போலும். ஆகையால் பேதி மருந்து அருந்தச் சொல்லுகிறான் என்று எண்ணினேன். எழுதப் படிக்கத் தெரியாதவரிடத்தும், தெரிந்தவரிடத்தும் இத் தகைய பிற மொழியைச் சொல்லித் தமிழின் நிலையைக் குலைப்பதில் ஊக்கங் கொள்ளும் தீயர்களில் இவனும் ஒருவனென்று கருதினேன்,

செழுந் தமிழை விடுத்து பிற மொழிச் சொற்களை கையாடுவதை மாற்றுமாறு வேண்டுகிறேன்.

(நூற்பா)

தாரத்துட் டோன்றும் உழையுழை யுட்டோன்றும்
ஒருங்குரல் குரலி னுட்டோன்றிச்—சேருமிளி
யுட்டோன்றுந் துத்தத்துட் டோன்றும் விளரியுட்
கைக்கிளை தோன்றும் பிறப்பு.

இந் நூற்பாவில் கூறியிருக்கும் ஒருங்குரல் சேருமிளி என இருசொற்களின் பொருளையும் முன்னைய கட்டுரையிற் றெளிவு படுத்தியுள்ளேம். இவ்வாறு கிளையிற் பிறப்பு முறையைக் கூறும் நூற்பா போன்று. நட்பிற் பிறப்பு முறையைக் கூறும் நூற்பா வொன்றும் இசைத் தமிழில் இருந்திருக்கவேண்டும்.

இனி, பிறப்பு முறையான் வந்த இசைகளையும் தனியலகுகளையும் பாலையின் பெயரினையும் அட்டவணைப் படுத்தித் தருவாம்.

| | | |
|---|---|---|
| க | = தாரம் - குரல் - துத்தம் - கைக்கிளை - உழை - இளி - விளரி | மேற்செம்பாலை |
| | — ௦ - ௭ - அ - ௰உ - ௰௩ - ௰௭ - உ௰க | |

உ =உழை - இளி - விளரி - தாரம் - குரல் - துத்தம் - கைக்கிளை } அரும்பாலை
— ០ - ச - அ - கூ - ώக - ώஎ - உώக

ங =குரல் - துத்தம் - கைக்கிளை - உழை - இளி - விளரி - தாரம் } செம்பாலை
— ០ - ச - அ - கூ - ώங - ώஎ - ώஅ

ச =இளி - விளரி - தாரம் - குரல் - துத்தம் - கைக்கிளை - உழை } கோடிப்பாலை
— ០ - ச - ரு - கூ - ώங - ώஎ - ώஅ

ரு =துத்தம் - கைக்கிளை - உழை - இளி - விளரி - தாரம் - குரல் } படுமலைப்பாலை
— ០ - ச - ரு - கூ - ώங - ώச - ώஅ

சு =விளரி - தாரம் - குரல் - துத்தம் - கைக்கிளை - உழை - இளி } விளரிப்பாலை
— ០ - க - ரு - கூ - ώங - ώச - ώஅ

எ =கைக்கிளை - உழை - இளி - விளரி - தாரம் - குரல் - துத்தம் } செவ்வழிப்பாலை
— ០ - க - ரு - கூ - ώ - ώச - ώஅ

ஏழாவது செவ்வழிப் பாலையில் ஐந்தாம் நரம்பு ώங அலகு கொள்ளாது ώ அலகுகளைக் கொண்டது, கணித முறையில் அமைந்த இவ்வமைப்பு நன்கு உற்றுணர்ந்து காணத்தக்கதாகும்.

(தொடரும்.)

# நெடுஞ் செழியன் காலம்

புலவர் நா. நல்லொளியன்.

நம் தமிழக வரலாற்றில் ஒரு பகுதி யாகிய சங்க கால வரலாற்றைப் பற்றிப் பொதுவாக அறிகிறோமே யல்லாது திட்டமாகக் காலக் குறிப்போடு அறிய முடியவில்லை. இன்று போல் அன்று மக்களிடத்து வரலாற்று முறைமையைப் பின்னோர் அறிந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணம் இருந்ததில்லை என்று கூறின் பிழை யாகாது. அவர்கள் வரலாற்றை எழுதி வைக்காமையே இதனை வலியுறுத்துவதாகும்.

பாண்டிய வரலாற்றினைப் பலர் எழுதியிருப்பினும் சங்க காலப் பாண்டியரைப் பற்றிய காலக் குறிப்பை இதுவரை ஆராய்ந்தா ரின்மையால், எம் மறிவிற் கெட்டிய சில சான்றுகளைக் கொண்டு சிலர் காலத்தை ஒல்லும் வகையில் நிறுவிக் காட்டுதலே இக் கட்டுரை யாகும்.

பாண்டி நாட்டை யாண்ட பாண்டிய மன்னர்களுள் நெடுஞ் செழியன் என்னும் பெயர் பெற்றோர் மூவருள்ளனர். அவர்களின் வேறுபாடு தெரியவே சில அடை மொழியைப் பெற்று ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன், தலையாலங் கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன், நம்பி நெடுஞ்செழியன் என்று கூறப்பெற்றனர். இவருள் முத லிருவரது காலத்தை ஆராய்வாம்.

நமக்குக் காலத்தை ஆராய ஓர் எல்லையாக நின்று உதவுவது சேரன் செங்குட்டுவன் காலமே யாம். அதனை அறுதியிட மதுரை யெரி யூட்டிய காலக் கணிதக் குறிப்பும் இலங்கை வேந்தன் கயவாகுவின் காலமுமே பெருந்துணை புரிவதாகும். வடநாட்டிற்கு ஏற்ற படையெடுப்புக்குரிய காலமும் அதுவாக விளங்கலான், அவன் காலத்தை முன்னர் ஆராய்ந்தார் முடிபினைக் காண்பாம்.

காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திர விழாவிற்குத் தொடக்க நாள் 'சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென' (சிலப். V, 64) என்றும், அவ் விழா 'நாலேழ் நாளினும்' (மணிமேகலை 18)

என்றும் கூறுவதாலும், அடியார்க்குநல்லார் உரையுள் கூறியுள்ளமையானும், இருபத்தெட்டு நாட்கள் விழா நடந்தன வென் றறிகிறோம். அவ் விழாத் தொடக்கம் சித்திரை இருபத்தாறு நாள் வெள்ளிக்கிழமை சித்திரை நாள் வளர்பிறை 14 ஆந் திதி யாதலால் அது கி. பி. 4–5–144 ல் கொடி யேற்றம் என்றும், கொடி யிறக்கம் வைகாசித் திங்கள் 18 ஆம் நாள் வெள்ளி யன்று நடை பெற்றது ஆதலால் கி. பி. 1—6—144 ல் என்றும், மறுநாள் சனி யன்று கடலாட்டு விழா நடந்த தென்றும், அன்றிரவே 2—6—144 லிலேயே மாதவியால் வெறுப்புற்ற கோவலன் கண்ணகியோடு மதுரை நோக்கிப் புறப்பட்டான் என்றும் தெரிகின்றது. மதுரை வந்து சிலம்பு விற்கச் சென்று கொலைக்களப் பட்ட அன்றே கண்ணகி அரசனுக்குத் தன் கணவன் கள்வ னல்லன் என்று மெய்ப்பித்து மதுரையை எரி யூட்டியது,

'ஆடித் திங்கட் பேரிருட் பக்கத்து
அழல்சேர் குட்டத் தட்டமி ஞான்று
வெள்ளி வாரத் தொள்ளெரி யுண்ண
உரைசான் மதுரையோ டரைசு கேடுறும்' என்ற
(சிலப். 23, 113—136.)

அடிகளால் அறியலாம். அது கி. பி. 10—8—144[1] இல் என்று கணித மூலம் அறுதி யிட்டுத் தமிழ்ப் பொழில் துணர் 3, மலர் 6 ல் வெளிவந்துள்ளது.

அதன்பின் கண்ணகி சேர நாடு சென்று 14 ஆம் நாள் ஆவணித் திங்கள் நான்காம் நாள் (கி. பி. 23—8—144) நெடுவேள் குன்றத்து அடி வைத் தேறித் தன் கணவனுடன் பூத் தேரூர்ந்து இந்திர னுலக மெய்தினாள். இதனை யறிந்த வேடுவர் செங்குட்டுவனுக்குச் சொல்ல அவன் வடநாடு சென்று இமயத்துக் கல் கொணர்ந்து கண்ணகிச் சிலை யமைத்தான். செங்குட்டுவன் கனக விசையரை வென்று கங்கைக் கரையி லிருந்தது வஞ்சி நீங்கியதிலிருந்து ஈராண்டும் எட்டுத் திங்களுமாம். 'எண்ணான்கு மதியம் வஞ்சி நீங்கியதும'[2] எனப்படுதலால் 19—5—147 ல் கங்கைக் கரையி லிருந்தான் எனத் துணியப்படும். மீண்டும்

[1] பொழிலில் தேதி குறிக்கப்படாமல் ஆண்டு மட்டிலுமே குறிப்பிடப்பட்டுள்ளது. யானே ஈண்டு அவற்றிற்குரிய தேதியைக் குறிப்பிட்டுள்ளேன்.

[2] சிலப்பதிகாரம் 27, 149.

வஞ்சி வந்தது.—ஐம்பத்து மூன்றாவது திங்களில் கி. பி. 19-2-149இல் வஞ்சிக்கு வந்திருக்கலாம் என்றும் அறுதியிடப் பட்டுள்ளது. கண்ணகி கோயில் மங்கல நீராட்டிற்குக் கயவாகு முதலியோர் வந்தனர் என்பதால் இலங்கையை யாண்ட கயவாகு வின் காலம் கி. பி. 148 முதல் 170 வரை ஆதலால் அவன் ஆட்சி யேற்ற உடனேயே சேரன் செங்குட்டுவனோடு நட்புற்றிருந்த னன், அதனாற்றான் அவன் வந்து விழாக் கண்டனன் என்பதும் நன்கு புலனாகின்றது. சேரன் செங்குட்டுவ னாட்சி யேற்று

'வையங் காவல் பூண்டநின் னல்யாண்டு
ஐஐந் திரட்டி சென்றதற் பின்னும்
அறக்கள வேள்வி செய்யா தியாங்கணும்
மறக்கள வேள்வி செய்வோ யாயினை '[1]

என்பதால் ஐம்பது ஆண்டுகள் ஆட்சியி லிருந்தமை நன்கு தெரி கின்றது. சிலை எழுப்பிய காலம் ஐம்பதாவது ஆட்சி எனவே பின் சில காலம் ஆண்டு மிருக்கலாம், ஆகவே செங்குட்டுவன் காலம் கி. பி. 140 முதல் 195 வரை என்பதாகும்.[2]

மதுரை தீவாய்ப்பட்டது கி. பி. 10—8—144 இல் எனவே அங்கிருந்த மன்னன் மாண்டதால் அவன் மகன் வெற்றிவேற் செழியன் என்பான் கொற்கை நகரில் இளவரசராயிருந்து ஆண்டு வந்தான். நெடுஞ்செழியனுக்கு நேர்ந்த கதியை அறிந்த வெற்றிவேற் செழியன் மதுரைக்கு வந்து ஆட்சியை மேற் கொண்டான். அவன் கி. பி. 144 ல் செங்குட்டுவன் வடநாடு சென்ற காலத்தில் முடி சூடிக் கொண்டான். அவன் தந்தை ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் எனப்படுகின்றான். செங்குட்டுவன் வடநாடு செல்லு முன்னமேயே ஆரியப் படை கடந்த நெடுஞ் செழியன் வடநாட்டின்மீது படை எடுத்திருக்க வேண்டும்.

மதுரை யெரி யூட்டிய கால மன்னவன் நெடுஞ்செழியனா? வேறா? என்று ஆராயுமி, சிலப்பதிகாரம் கட்டுரைக் காதையில்,

'................................ பனித்துறைக்
கொற்கைக் கொண்கன் குமரித் துறைவன்

1 சிலப் 28. 129—132.

2 இவ்வாறு அறுதியிட்டது இ. மு. சுப்பிரமணிய பிள்ளை, மா. இராஜமாணிக்கம் முதலியோராவர்.

பொற்கோட்டு வரம்பன் பொதியிற் பொருப்பன் '[1]

என்றும்,

' வடவாரியர் படை கடந்து
தென்றமிழ்நா டொருங்கு காணப்
புரைதீர் கற்பிற் றேவி தன்னுடன்
அரசுக் கட்டிலிற் றுஞ்சிய பாண்டியன்
நெடுஞ் செழியன் '

என்னும் மதுரைக் காண்ட ஈற்றுக் கட்டுரை யானும் ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியனே கண்ணகி முன் அரசுக் கட்டிலிற் துஞ்சிய பாண்டியனாவன் என்பது தேற்றம். செங்குட்டுவன் வடநாடு நோக்கிப் படை யெடுத்தற்குக் கனக விசையர் கடுஞ் சொலாற் றமிழ் மன்னரைப் பழித்தமையும் ஒரு காரணமாகலின் தமிழ் வேந்தரைப் பழிக்க அவரோடு தொடர் பின்றி யெழக் காரண மின்மையால் செங்குட்டுவனுக்கு முன் பாண்டியன் நெடுஞ்செழியன் படை யெடுத்து அடக்கினனாதல் வேண்டும் என்பதும் வலியுறுகிறது.[2] அதனாற்றான் இவனை ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் என அழைத்தனர் போலும்.

இவன் தன்னாட்டுக் கல்வியை மிகப் போற்றிப் பரப்பினனாதல் வேண்டும். இவன் பாடிய புறப்பாட்டு இவனது அறிவுடைமையை நன்கு புலனாக்குகின்றது. ஆகவே இவன் வரலாற்று ஆசிரியர் முறைப்படுத்தும் இருபத்தைந்து ஆண்டுகளேனும் ஆண்டான் என வைத்துக் கொண்டால், இவன் காலம் கி.பி. 114 லிலிருந்து, கி.பி. 144 வரையிலாம். நாட்டில் யாதொரு குறையு மின்றியும் திங்கு பழி முதலிய யியற்றாமை ஆண்டானென்றால் எவ்வளவு காலம் நல்லுழைப்பு வேண்டும் என்பது யாவரு மறிந்த தொன்றேயாம். ஆகவே, அவன் காலத்திலெத்துணை யாண்டு வாழ்ந்தா னென்பது நன்கு புலனாகவில்லை எனினும் ஓரளவு மேற் காட்டிய வாறுள்ள காலம் உண்மை என எண்ணலாம்.

நெடுஞ்செழியனுக்குப் பின் முடி சூடிக் கொண்டவன். கொற்கையை யாண்ட வெற்றிவேற் செழியனாவன் என்பதை

1. சிலப். 23. 10—12.

2. இவனால் வெல்லப்பட்ட மன்னவர் யாவர் என்பது பிறிதோர் கட்டுரையில் வெளியிடப்படும்.

'கொற்கையி லிருந்த வெற்றிவேற் செழியன்
*     *     *     *     *

உரைசெல வெறுத்த மதுரை மூதூர்
அரைசுகெடுத் தலம்வரு மல்லற் காலைத்
தென்புல மருங்கின் றீதுதீர் சிறப்பின்
மன்பதை காக்கும் முறைமுதற் கட்டிலின்
நிரைமணிப் புரவி யோரேழ் பூண்ட
ஒருதனி யாழிக் கடவுட் டேர்மிசைக்
காலைச் செங்கதிர்க் கடவுளே றினனென
மாலைத் திங்கள் வழியோ னேறினன்.'*

என்றதனால் நன்கறியலாம். வெற்றிவேற் செழியன் பட்ட மேற்றதும் 'நன்மாறன்' எனப் பெயர் பெற்றான். கி. பி. 149இல் இமயஞ் சென்று மீண்ட செங்குட்டுவனின் அரசியல் வினைஞன் நீலன் என்பான் பொன்னி பாண்டி முதலிய நாட்டு மன்னர்கள் செயலைக் கூறும் போழ்து, 'கொற்றம் புதுவதென்றனன் போர் வேற் செழியன்'[1] என்றதனாலும் நன்குணரலாம்.

நெடுஞ் செழியன் ஆட்சி யெய்திய காலத்தில் சேரநாட்டின் ஒரு பகுதியை 'பொறையன் மாந்தாஞ்சேரன்'[2] என்பவன் ஆண்டு வந்தான். அவனைக் காணப் புகாரிலிருந்து பராசரன் என்னும் இரவலன் பாண்டி நாட்டு வழியாகச் சேரநாடு சென்று கண்டு பரிசில் பெற்று மீண்டான். வரும் வழியில் பாண்டி நாட்டின் திருத்தங்கால் என்னும் ஊரில் ஒரு சிறுவனின் கல்வி ஆர்வங் கண்டு அவன் தான் பெற்ற பரிசிலில் ஒரு பகுதியைக் கொடுத்துச் சென்றான். அது பெறாத ஏனைய சிறுவர் அரசியலாரிடம் அறிவித்தனர். ஆட்சியாளர் அச்சிறுவனைச் சிறையிலிட்டனர். அவன் தாயினால் உண்மையை அறிந்து நெடுஞ் செழியன் சிறையினின்றும் விடுவித்துப் பெரும் பரிசிற் பல நல்கி தன் வினைஞர் செய்த தவறு தான் செய்ததாகக் கொண்டு அக்குறை தீரப் பல அறங்களைச் செய்தான்.[3]

---

* சிலப். 27, 127, 131, 138.

1 சிலப். 28, 106—107.

2 இவனே அகநானூற்றின் 142ஆம் பாட்டிற் கூறப்படும் மாந்தான் பொறையன் என்பவனாவன். சேரமான் யானைக் கண் சேய் மாந்தாஞ்சேரலிரும் பொறை என்பவனின் தந்தையுமாவன் என உய்த்துணரக் கிடக்கின்றது. சோழருள் கிள்ளி, பாண்டியருள் செழியன், வழுதி முதலியன போலப் பொறையன் என்னும் சேரக்குரிய பெயரை முதற்கண் பெற்றவனாவன்.

3 சிலப்பதிகாரம் கட்டுரைக் காதையில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

இந்நெடுஞ் செழியன் மறம் கல்வி அறிவு ஒழுக்கம் முதலியவற்றிலும் சிறந்து விளங்கியவனுவன். கல்வியிலும் கற்ருேர்பாலும் பெருமதிப்பு வைத்திருந்தான். இவன் காலத்தில் பாண்டிய நாட்டில் கல்வியானது சாதி குலம் பாராது எல்லோருக்கும் பயிற்றுவிக்கப்பட்டது. இழி குடியினர் என ஒதுக்கப்பட்டவராயினும் கற்று வல்லவர்களை இவன் அரசியலில் இடந்தந்து ஆதரித்து வந்தான் என்பது இவன் பாடிய 'உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்' என்னும் புறப்பாட்டால் நன்கு அறியலாம். இவன் ஆட்சியின் போழ்து புதைபொருளெல்லாம் அந்நில முடையவரே எடுத்துக் கொள்க என்றும் கடமையாகத் திறை செலுத்துவோர்க்குக் 'கறைவீடு செய்மின்' என்று இறைதள்ளியும், சிறைப்பட்டாரை விடுவித்து நன்னெறி ஒழுகச் செய்தமையும் சிறந்த செயல்களாகும்.* இவனுட்சியில் உள் நாட்டுக் கலகங்கள் ஏதும் நிகழ்ந்தில. அமைதியான ஆட்சியால் மக்கள் மகிழ்வெய்தினர்.

இத்துணை வளமும் அமைதியும் அறிவு விளக்கமும் ஒரு நாடுபெற எவ்வளவு காலமாகும் என்பதை விடுதலைபெற்ற நம் நாட்டவர் நன்கு உணர்ந்து பார்ப்பார்கள் என நம்புகிறேன். உருசிய நாட்டு வரலாற்றைக் கொண்டு ஒருவாறு எவ்வளவு காலத்தில் நாட்டைச் சீர் திருத்தலாம் என்பதை நன்கறியலாம். ஆகவே, இவன் சுமார் முப்பது ஆண்டுகளுக்குமேல் வாழ்ந்திருக்கவேண்டும் என்று எண்ணவேண்டி யிருக்கின்றது. ஆயினும் வரலாற்று ஆராய்ச்சியாளர் கூற்றுப்படி இருபத்தைந்து ஆண்டுகள் வாழ்ந்தான் எனக் கொண்டாலும் இவன் இறந்தது *10—8—144* இல் ஆதலால் கி. பி. *119* முதல் கி. பி. *144* வரை ஆண்டான் என்பது பெறப்படுகின்றது.

இதுகாறும் கூறியவாற்ருன் கற்புக்கரசி கண்ணகி முன் அரசுக் கட்டிலில் தேவியோடு துஞ்சின பாண்டியன் நெடுஞ்செழியன் என்பதும் அவனே ஆரியப் படை கடந்தான் என்பதும் இவன் பொறையன் மாந்தரன் சேரலுக்கு நட்பினன் என்பதும் அவனுண்ட காலம் கி. பி. *119—144* வரை என்பதும் நன்கு தெளியலாம்.

---

* சிலப்பதிகாரம் 23. *125—129*. இதனுற்ருன் செழியனுக்கு அடிமைப்பட்டிருந்த வடநாட்டுக் கனக விசையன் போன்ற மன்னர் தமிழர் மற மற்றவர் என எள்ளி நகைத்தனர் போலும். அதனுற் சினங் கொண்ட செங்குட்டுவனது வடநாட்டுப் போர் நடைபெற்றது என்றும் தெரிகிறது.

(40 ஆம் பக்கத் தொடர்ச்சி.)

யாராய்ந்த பின்னர் அறியாமையை அறிவால் வெல்லவேண்டு மென்று மொழிந்தார்; ஒரு பொருளை ஆராய்கையில் அறிய இயல வில்லை என்ற நிலை வருமென்றும், அறிய இயல வில்லை என்றதை யுணர்ந்ததும் அறிதற்குரிய அவா கிளம்புமென்றும், பின்னர் அவாவுதலினால் பொருளைத் தேடும் நிலை வருமென்றும், தேடின் காண்பதுறுதி என்றும் கூறினர். தேடினும் கிட்ட வில்லை எனின் கட்டாயம் கிட்டுதற்குரிய உயரிய நல்லறிவைப் பெறுகிறானென்றார். முரண்பட்ட முடிவுகள் நிகழினும், எதிர் மறைகளைப் பொருந்த வைப்பினும் ஆராய்பவன் உயர்நிலை எய்துவனெனினும் பொருளுக்காகத் தேடவேண்டியதேஎன்றார் ஆராய்தலென்பது வையகப் பொது இயலென இயம்பினர்.

'ஆராய்ச்சியே வாழ்க்கையின் அனுபவம்; ஒரே தன்மை யுடைய தாகிய உண்மையும் நன்மையும் வாழ்க்கையின் முடிந்த முடிபு. பொதுமையே உண்மையின் சோதனை. மனமொத்து உசாவுதலே முறை; பகுத்தறிவு ஆராய்ச்சியே துறை,' என்ற பொன்னான சாக்ரடீசின் கருத்தை மறந்தாரில்லை.

தன் அறிவு விளக்க மடைதலே ஞானமென்றும், தன் கட னாற்றுவதே பண்பு என்றும், வளர்ந்தழியும் வையகத்தினின்று பறந்தோடாது மனதை அழகுடன் பிணைத்து அரியவைகளை அரும்ப வைத்தல் வேண்டுமென்றும், நற்பொருள் (தத்துவ) வாழ்க்கையே உண்மை யுடையதென்றும் வையகத்திற் குரைத்தார்.

பார் பீடுற பிளாட்டோவைப் போன்று, சமுதாயத்தைச் செம்மையாக்க, அரசியலைப் பண்புடனும் அறிவுடனும் நடாத்த வேண்டுமென்று பண்பும் அறிவும் கலந்த அரசியலை அமைத்துக் கொடுத்து, ஞானி நாடாளவேண்டுமென்று முழக்கி, சமூக வளர்ச்சிக்கே தனிப்பட்டவர்கள் உழைக்க வேண்டுமென்று கூறி, அறிவு விளக்கமடைதற்கு அடிகோலி, வழிகாட்டி, உலகை உய்வித்தவர்? வாழ்க பிளாட்டோ! வாழ்க பிளாட்டோ!! வாழ்க பிளாட்டோ !!!

---

## மதிப்புரை

திருக்குறள், மூலம், ஆராய்ச்சிக் குறிப்புக்கள்-கடலூர் பொதிகைப்பதிப்பக வெளியீடு - 160 பக்கம்-ரூ 2. இப் பதிப்பகம் இரு நல்லாசிரியர்களை நாடி அவர்களது அறிவுரைத் திறனுக்கு ஆதாரவளித்ததுபோல் வேறெப்பதிப்பகமும் அளித்ததாகத் தெரியவில்லை. அப்பதிப்பகத்தின் தம்வேலையாக இந்நூல் திகழ்கிறது. ஆராய்ச்சிக்குறிப்புக்கள் மூன்றில் ஒருபங்கு இடம்பெறுகின்றன. ஏனையோர் பன்மடங்கு பெருக்கி வெளியிட்டவை இதில் மிகச்சுருங்கிப் பயன் தருகின்றன. அவற்றுள் முப்பாலிற்கும் மூன்று முதற் குறிப் பகராதிகளும், திருக்குறள் வைப்பு வெண்பா நூல்கள் 9இல் கையாளப்பட்ட குறளெண்களும், திருக்குறள் உரையாசிரியர் நால்வர் வரிசைப் படுத்தியுள்ள வைப்பு முறைகளும், வரித் தொகையும் (குறள்களின் முதலெழுத்துத் தொகையும்), வளர்மாலையும் (மதிப்புரை மணிகள் சிலவும்) சிறந்தனவாகும். ஆராய்ச்சியாளர்க்கு அரும்பய னளிக்கவல்லது.

* * * * *

தெய்வப் புலவர் திருவள்ளுவர்–சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, ஆசிரியர், ஒளவை. சு. துரைசாமி பிள்ளை, பக்கம் 94- விலை ரூ. 1. திருவள்ளுவர் வாழ்வு, அவரைப் பற்றிய கதைகள் யாவும் அவரது திருக்குறட் கண்கொண்டு ஆராய்ந்து அளந்துரைக்கப்படுகிறது. அழகிய பதிப்பு. அரிய நடையும் அமைவுடைய கருத்துக்களுமுடையது.

**சாமி. வேலாயுதம் பிள்ளை**

---

## யாழ் நூல்

பேராசிரியர் விபுலானந்த அடிகளார், பதினான் காண்டு ஆராய்ந்து எழுதிய அரிய, சிறந்த இசை நூல்.

பொருள் பொதிந்தது. தோற்றம் பொலிந்தது. விலை மலிந்தது.

| | | |
|---|---|---|
| மெல்லிய தாள் | தாள் உறை | 15—0—0 |
| | துணி உறை | 18—0—0 |
| தடித்த தாள் | தாள் உறை | 18—0—0 |
| | துணி உறை | 20—0—0 |

அஞ்சல் செலவு வேறு.